உ

சிவ சிவ

# திருப்பாதிரிப்புலியூர் சித்தாந்தச் சைவநெறி மன்றம்

கடலூர் - 607002

# வழங்கி மகிழும் பிறந்தநாள் வாழ்த்து

---

அன்புடையீர்! வணக்கம்.

தாங்கள் — — தேதியில் ஆவது பிறந்தநாள் காண்பது அறிந்து நம் மன்றம் வாழ்த்தி மகிழ்கிறது.

எல்லாம் வல்ல பரம்பொருளே நம் வாழ்வின் முதற் பொருளாயிருந்து நம்மை வழி நடத்திச் செல்கிறது என்பதில் அசையா நம்பிக்கையோடு வாழ்வதாலும், உறவினர்களையும் நண்பர்களையும் கடவுளின் திருவுருவாய்க் கண்டு அவர்களிடத்தில் என்றும் அன்போடும் பண்போடும் பழகுவதாலும், தங்களுக்குரிய கடமைகளைக் கடவுள் தொண்டாகவே உணர்ந்து செம்மையாய்ச் செய்து முடிப்பதாலும், தங்கள் வாழ்வில் மேலும் நலமும் வளமும் சேர்ந்து நானிலம் போற்ற வாழ்வீர்களாக!

தங்களால் இயன்ற அளவுக்குச் சமயத்திற்கும் சமுதாயத்திற்கும் தொண்டு செய்வீர்களாக!

பல நல்ல பழக்க வழக்கங்களைக் கொண்டிருக்கும் தாங்கள் இன்று தொடங்கி மேலும் ஒரு புதிய நற்செயலை நாளும் செய்ய உறுதிகொண்டு செயல்படுவீர்களாக!

## மதுரை இளநாகனாரின் வாழ்த்து

நீநீடு வாழிய நெடுந்தகை! தாழ்நீர்
வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்
நெடுவேள் நிலைஇய காமர் வியன்துறைக்
கடுவளி தொகுப்ப ஈண்டிய
வடுஆழ் எக்கர் மணலினும் பலவே.

— புறநானூறு 55 (17-21)

திருச்செந்தூரில் கடலின் அலைகளால் மோதப்படுவதும், முருகப் பெருமான் நிலையாக எழுந்தருளியிருப்பதுமாகிய திருக் கோயிலின் முன்னுள்ள கடற்கரையில் பெருங்காற்றால் திரட்டித் தொகுக்கப் பெற்ற மணலைவிடப் பல்லாண்டு காலம் நீ வாழ்வாயாக!

## தொல்காப்பியரின் வாழ்த்து

வழிபடு தெய்வம் நிற்புறங் காப்ப
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து பொலிமின்!

"பெரும்பற்றப் புலியூரானைப் பேசும்நாளே பிறந்தநாள்" எனப் புகலும்

## திருநாவுக்கரசரின் அறிவுறுத்தல்

நன்று நாள்தொறும் நம்வினை போயறும்
என்றும் இன்பம் தழைக்க இருக்கலாம்
சென்றுநீர் திருவேட்களத் துள்ளுறை
துன்று பொற்சடையானைத் தொழுமினே.

## திருவள்ளுவரின் அறிவுறுத்தல்

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். (3)

அன்பரின் அகமாகிய மலரில் வீற்றிருக்கும் கடவுளின் சிறந்த திருவடிகளை இடைவிடாமல் நினைக்கின்றவர் இன்ப உலகில் நிலைத்து வாழ்வார்.

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார். (6)

ஐம்பொறிகள் வாயிலாகப் பிறக்கும் வேட்கைகளை அவித்த இறைவனுடைய பொய்யற்ற ஒழுக்க நெறியில் நின்றவர் நிலைபெற்ற நல்வாழ்க்கை வாழ்வர்.

## திருவருள் வேண்டல்

திருவும் கல்வியும் சீரும் தழைக்கவும்
கருணை பூக்கவும் தீமையைக் காய்க்கவும்
பருவமாய் நமது உள்ளம் பழுக்கவும்
பெருகும் ஆழத்துப் பிள்ளையைப் பேணுவாம்.

— ஞானக்கூத்தர்.

தழைத்தல், பூத்தல், காய்த்தல், பழுத்தல் இவை மரம், செடி, கொடிகளில் ஒன்றன் பின் ஒன்றாக நிகழும் தொடர் செயல்கள். இச்செயல்களை நம்மிடத்தில் பொருத்திச் சொல்லி யிருப்பது கவிதை அழகு. காய்த்தல் இங்கு அழித்தல். ஆழத்துப் பிள்ளையார் திருமுதுகுன்றம் சிவன் கோவிலில் எழுந்தருளியிருப்பவர்.

திருவும் கல்வியும் சீரும் சிறப்பும் உன்
திருவடிப் புகழ்பாடும் திறமும்நல்
உருவும் சீலமும் ஊக்கமும் தாழ்வுறா
உணர்வும் தந்து என(து) உள்ளத்(து) அமர்ந்தவா!
குருவும் தெய்வமும் ஆகி அன்பாளர்தம்
குறைதவிர்க்கும் குணப்பெருங்குன்றமே!
வெருவும் சிந்தை விலகக் கஜஆனனம் விளங்கும்
சித்தி விநாயக வள்ளலே!

(வெருவும் - அஞ்சும்; கஜ ஆனனம் - யானை முகம்)

திருநிலைத்து நல்அருளொடும் அன்பொடும்
சிறப்பொடும் செழித்து ஓங்க
உருநிலைத்து இவண் மகிழ்வொடு வாழ்வுற
உவந்துநின் அருள்செய்வாய்!
இருநிலத்தவர் இன்புறத் திருவருள்
இயல் வடிவொடு மன்றில்
குருநிலைத்த சற்குரு எனும் இறைவ! நின்
குரைகழல் பதம் போற்றி!

— இராமலிங்க அடிகளார்.

(இவண் – இவ்வுலகில்; இருநிலம் - பெரியநிலம்; குரு நிலைத்த - மேன்மை நிலைபெற்ற; குரைகழல் – ஒலிக்கும் கழலணிந்த திருவடி)

தனம் தரும்; கல்வி தரும்; ஒருநாளும் தளர்வறியா
மனம் தரும்; தெய்வ வடிவும் தரும்; நெஞ்சில் வஞ்சமில்லா
இனம் தரும்; நல்லன எல்லாம் தரும்; அன்பர் என்பவர்க்கே
கனம்தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே.

— அபிராமி பட்டர்.